


உ

சிவமயம்.

திருவாரூரைச்சேர்ந்த

மடப்புரத்தில் சமாதிகொண்டிருக்கும்




# ஸ்ரீ குருதக்ஷிணாமூர்த்தி

## சுவாமிகள் சரித்திரம்.

# நொண்டிச்சிந்து.

இஃது

தஞ்சைமாநகரம் கணபதிபிள்ளையால் இயற்றப்பெற்று

நாகை பிரின்ஸ் அப் வேல்ஸ் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

[இதன் விலை அணா 2




உ

திருவாரூரைச் சேர்ந்த வன்மீகபுர மென்னும்

மடப்புரத்தில் சமாதி கொண்டிருக்கும்,

# ஸ்ரீ குரு தக்ஷணாமூர்த்தி சுவாமிகள்

# சரித்திரம்.



காப்பு.

சீராருஞ் செல்வமிருஞ் செங்கழுநீ ரோடைதரு
மாரூர் வன்மீகபுர மமருட்—டாரூருஞ்
சித்திதரு மெய்ஞ்ஞானத் தெக்ஷணா மூர்த்திதொழ
அத்திமுக னன்பே துணை

நூல் காரணம்.

உலகெலாஞ் சுற்றிவருமி யாழ்வலா ணரதன் உமைபாக னுலகை மேவ
நிலவுலாம் வேணியன் னிடம்மரு மலைமகள் நிற்றுபம் முனியை நோக்கி
யலகிலா நிலவுலகி லதிசயமு முள்ளதே லறைகுவா யதனை யென்னக்
கலைவலானொருழுறு தான் கண்டதோ ரற்புதக் காட்சியைக் கழறுவானே

நூல்.

## தொண்டிச் சிந்து.

மலைக்கோன் வரத் துதித்த-தவ
மாதுமைபே யான்கண்ட மகிமையைச் சொல்வேன்
நிலத்தார் காவிரிசூழ்-முத்தி
நெறி தருந் திரிசிர புரத்தருகே 1

கிழாலத் தூரென்னும்-ஒரு
கெடிஸ்தலங் கார்காத்தார் குலத்துதித்தே
ஊழாகும் விதிவலிபால்-பலவா
றுற்றமக வேள்வியொடு நோன்புகள் நோற்றும் 2

மகப்பேறற்ற சிவ-சிதம்பர
பதிபனு மீனாம்பிகை தேவியுடனே
அகத்துறு விசனங்கொண்டு-தலந்தோறும்
அரியதாஞ் சிவபூசை செய்து முடிவில் 3

அண்ணாமலைய னாகி-யங்குறும்
அபிராமியு முண்ணாமுலை யம்மையைப் போற்ற
கண்ணாமலகுப்ப-கருணா
கரன் மீனாம்பிகை கருவிலுற்றே 4

ஐயிரு திங்கள் சென்று-யாந்தர்
அகவிருள் நீங்கி கடைத்தேறுமாறு
பையரவு பூண்டோனருளால்-தெய்வ
பாலனாரு ணாசலமென் றுற்று மாதா 5

பால்சுராவிடி லழுதல் தாயைப்
பார்த்தல் சிரித்தலின்றிக் கண்கள்மூடி
சாலவுபர் வீடதுவாய-நாலாஞ்
சாயுச்சியந் தந்துதவு மாவிருக்கும் 6

போன நிலை கண்டறிந்தே-மூவா
முத்தலை ரங்கிரத்தில வைத்து நாடி
ஊனமிலா நிட்டைகூட-பெற்றோர்
ஊமைப்பிள்ளை யென்று மனநோவ வோர்நாள் 7

தண்டிகா வியர்பாராட்-சிவனுஞ்
சந்நாசி யாசமனே வந்தபோது
கண்டவர்பால் குறை கூற-துறவி
கண்டந்த பாலகனை யார் நீ யென்ன 8



நானே நீ நீநானேனென்ன-பெரியார்
நன்றிது சத்தியமா மென்று மறைய
தானேதா னாகிநின்ற-சங்கர
சயபுசிவ ரூபியான சிறு குழந்தை 9

தந்தையோர் பகற் போதில்-தாயுமான்
சுருதக்கிப் புறப்பட நானை யிரண்டு
சொந்தத்தார் வருவரென-பலன்
சொலனாடி விருந்தின ரிருவர்வர 10

அச்சமுடன் நந்தையாரும்-வாழுநாள்
    ஆருத்ரா சேவைகோரி விடைகேட்ப
இச்சையுந்தன் தாய்காளை-புரைக்கி
    எறி பறிப்பமென்ன அப்படியாச்சு 11

பள்ளிக் கனுப்பச்சொல்ல-தந்தையும்
    பக்ஷமுட னப்படியே செய்யக் குழந்தை
பிள்ளைகள் போல் படிக்காது-பாடம்
    பிழையின்றி யொப்புவிக்கும் வாத்தியாரின் 12

மைந்தன் திண்ணைக் கீழ் விழுந்து-கையொடிந்த
    வகை சொல்லித் திருத்தினார் தப்பிக்குத்தான்,
தந்தவுரை மீறி நடப்ப=அண்ணன்
    தாமவர்க் கேட்கவுந் தம்பி பயந்து 13

கூசியுமே யில்லம் விட்டார்-தான்செய்
    குற்றமதை நீக்கவென்று நாணடைந்து
காசிநக ருற்ற சேதி-பெற்றோர்
    கடுந்துயர் தீர அவர்க் குரைத்தாராம் 14

அரங்கமா நகருறையும்-ஆரா
    வமுதய்யங் காருமவர் தேவியுடனே
அரங்கன் சொன்னபடி-நாளும்
    ஆவின்பால் கொண்டுவந்து சாமிக்குதவி 15

பாலிலொரு சேடத்தை--பார்ப்பனர்
    பத்தியுட னருந்திட மாது மன்றே
காலமதில் கர்ப்பமாகி முதிர்நாள்
    கண்டெடுத்தா ராண்குழந்தை களிப்படைந்தார் 16

அம்மவு வளர் நாளில்-ஓர் நாள்
    அக்குழந்தை தொட்டி விட்டுத் தூங்கவைத்து
செப்பை சாமி சேவைகாண-வந்தபோது
    தீ பட்டு மூங்கள் வீடு வேகுதென்றார் 17

பெற்றோர்க ளோட லானார் போகுமுன்
    பேர்பெரிய வீதிவெந்து சாம்பலாச்சு
சுற்றக்கார் கூடலானார் ஐயோ
    சுந்தரமாங் குழந்தையும் வேகுதென்பார் 18

அப்பொழுதோர் சந்நாசி எவரும்
ஆச்சரியப படும்படி குழந்தைதனை
கைப்போ தெடுத்து வந்து-பக்க நின்ற
கன்னிகையோர் பார்ப்பினியின் கைக்கொடுத்து 19

மாயமாய் மறையலுற்றார்-அத்தருணம்
மைந்தனையு மீன்றவர்கள் வந்து பார்த்து
நேயமாய்த் தேடிவந்து-கண்ட
நித்தனருளால் நெருப்பிற் றப்பியிருந்த 20

சலியாத தம்மகற்கே-அருணா
சலமென்று பேருமிட்டார் வைணமாக்கள்
சலங்கொண்டு பேரையாற்றி-வெங்கடா
சலமென்று நாமமிடக் குழந்தை சிறி 21

அரி' முதலெழுத் தசரம்-'திரு'
அந்தத்தி லிருப்பது" ருகரமாகும்"
கரியவன்''' நாரணனில்'''-ணகரங்
காணுவது பசலமே வேங்கடமாம் 22

என்னவவர் வெட்கிப்போனார்-என்தாயே
யின்னுமோ ரதிசயஞ் சொல்லக்கேளீர்
தன்னுடன் பள்ளிபயின்ற-வொரு
சற்குணச் சிறுவனை விஷந்தீண்ட 23

அருணாசலங் கேட்டோர்-பிரம்பால்
அச்சிறுவ னுயிர்த் தெழத் தட்டி யெழுப்பி
கருணா கரனென்ன அற்புதங்
கண்டவர்களாச்சரியங் கொண்டு துதித்தார் 24

மற்றுமொரு சேதி கேளீர்-சுவாமி
மாதா பிதாவை யொரு தினம் விளித்து
அற்றை முத லெட்டு நாளில்-நமக்
காங்கால மெய்துமென அன்னோர்களும் 25

மைந்தனந்தோ தஞ்சுமென்று-சிவநாமம்
வசனித் திருந்தாரந்த எட்டாம் நாளில்
தந்தையர்க்கு மன்னையார்க்குந்-தூளிதந்
தரித்தார் கணமவர் மரித்தாரே 26

திகளஞ் செய்தவுடன்-சுவாமிகள்
சஞ்சார மாகப்பல தலமடைந்து
தகைமையாய் வைத்தீஸ்வரன்-கோவில்
தர்மகர்த்தா சொற்படியே கோவில் கணக்கு 27

வேலைசில நாள் பார்க்க-சிலதினம்
வேறொருவர் சொல்லாது தானேயெழுதி
காலை மாலை திருட்டினங்கள்-சாமி சொல்லக்
கண்டவர்க ளச்சமுற அவ்விடம் விட்டே 28

அதிவீர ராமபட்டணப்-வீதிசெல்ல
அவணுறை வேளாளர் சுந்தரம்பிள்ளை
விதிமுறை பூசைகோலும்-சிறந்த
வேலையி லமர்த்த அவர் விசித்திரமாய்ப் 29

பூசைத் தொண்டுடனிட்டை-நாளும்
புரிவதை பிள்ளைகண்டு மனந்தெளிந்து
நேசித்தா ரவர் மகளோ-மிக்க
நெறியற்ற காந்திமதி மங்கை குருவைக் 30

காமியாய்க் கட்டியணைக்க-அவருங்
கண்ணிலையோ வென்றுசொலிக் கடந்து போனார்
சாமிகளிட்ட சாபம்-தலைக்கேறி
சாமத்தே கண்கள் கெட்டுத் தனம் மறைய 31

நன்றே ரிதை யறிந்து-மகளுடன்
எங்கெங்குந்தேடி பலநாள் கழிந்து
சான்றோ ராவிடையார்-கோவில்
தருநிழ லிருப்பதைக் கண்டு பணிய 32

நீர்தெளித் திருகண் ணுந்-தனமும்
நேராகத் தந்தருள கோவில் தம்பிரான்
சூரான குன்ம வலியால்-நெடுநாள்
தொந்திர வடைந்தவருக் கதைமாற்றி 33

திருக்கோ கரணஞ்செல-பேய்கொண்ட
சித்தப் பிரமை நீங்கப் புன்னகைசெய்து
மருளனைத் தூயனுக்கி விராலிபலை
பழைக்காகத் தாசிவிட்டுத் திண்ணையுறங்க 34

பக்தன் பசிக்கக்கண்டு-முருகனும்
பார்ப்பனனுய்த் தன்பூசை சர்க்கரைப் பொங்கல்
அத்தனருள் பெற்றவர்க்கே-பன்புருக
அளித்துட னந்தரமாய் மறைந்தனராம் 35

புதுக்கோட்டை தாசில்தார்-பிரசாதம்
புசிக்கவும் பொங்கல் கொண்டு வரப்போனர்
அதைக்காண அவர்தேட-திண்ணை தனி
லசந்துறுதம் பெரியாருந்தட்டு மிருக்க 36

யாரென் றையுற்றே-தாசில்தாருக்
கறிவிக்க அவர்வந்து சேவிக்க
சீரொன்றுஞ் சேஷத்தில்-சிலபாகந்
தின்னக் கொடுத்திடவுந் தின்றவுடனே 37

வெகுநாள் துன்புறுத்துந் தலைநோய்
மீளாத காசநோயும் விண்டோட
வகைவகை பூஜித்து-தாசில்தார்
வாழ்த்துபெற்று வாழ்ந்திருந்தார் சாமியிப்பால் 38

மன்னர் குடிபுக்கு-ராஜ
மன்னர்தஞ் சந்நதியில் நிட்டைபுரிந்தார்
சின்னீன அர்ச்சகனுஞ்-சூத்திரன்
திருமுன்ன ரிருப்பது தீண்டலென்ன 39

தீண்டல்நீ யென்று போந்தார்-அப்போதவன்
தேவி குளத்தில்விழுந் திறந்தாளென
ஆண்டுசிலர் வந்துரைத்தார்-அதறிந்த
அவ்வூரார் மிக்கஅச்ச முற்றூ ரப்பால் 40

நேர்ந்ததைச் சொல்லக்கேளும் அம்மா
நீடா மங்கலத் தாற்றருகே
நீர்விளை யாடவந்து-கரையில்
நின்றசிறு வடுகனை நாகந்தூரத்த 41

அச்சிறுவ னச்சங்கொண்டு-சாமிபால்
அடைக்கல மென்னவிவன் நல்லபிள்ளை
சீச்சீ நீ தீண்டாதே யென்றிடவும்
திருமபிப்போய் விட்டது சர்ப்பமுமே 42

குழந்தையும் வீடுபோக அச்சமுற
குருநாதன் மரமொன்றை யேவியேயிக்
குழந்தையை யில்லம் விடுவா-யென்னவும்
குதித்தொரு முனிதந்தை ரூபங்கொண்டு 43

இல்லத்திற் கழைத்தேக-பெற்றார்
யிவனுற்ற சேதியெல்லாங் கேட்டறிந்தே
நல்ல நல்ல வெனவியந்து-பல்லோரும்
நாதனடி வந்தடைந்து வாழ்த்து பெற்றார் 44

இப்பால் பெரியாரவ்-விடம் விட்டு
ஏற்றபழங் களத்தூ ருடையார்மின்
செப்பும் பிரசவசத்தில்-மிக்க
தீராத நோயாலுயிர் போந்தருணம் 45

அவ்வுடையான் வந்து வணங்க-சுவாமிகள்
ஆண்குழந்தை யுதித்தது போய்பாரென்ன
அவ்வண்ணமே நடந்தேற-உடையார்
ஆனந்தங் கொள்ள அந்த ஊரைவிட்டு 46

தம்பியுமே வதிந்திருந்த-தூய
தலமாம் ஆலப்பாடி வந்தடைந்தார்
இம்பருக்கு மெளிதாக-அவ்வூர்
எல்லோருங் கேட்டுணர சிவஞான 47

போதச் சிந்தனமென்னும்-அரிய
பொக்கிஷமாம் நூலொன் றியற்றித்தந்தார்
வாதம்புரி யொரு பெரியார்-வாசித்து
மதம்நீங்கி வந்தடியை வாழ்த்தித் தெளிந்தார் 48

வேறுமோ ரற்புதங் கேளீர்-அவ்வூர்
விருத்தராஞ் சிதம்பர முதலியென்பார்
கூறுமோர் மகவின்றி-தனது
குலகுரு சொன்னபடி குருநாதற்குப் 49

பிக்ஷையுஞ் செய்து வைத்தார்-வைத்த
பிறகொன்று நீக்கடத்தா ளுள்பனைவி
தக்ஷணங் கருவுற்றே-அது முதல
தசமெனுந் திங்களதி லாண் சனித்தான் 50

மேணடந்ததைச் சொலவேன்-தில்லை
    வேங்கட மணணாமலை விருத்த சைலம்
ஆனபல தலங்கடந்தே-ஒற்றியூர்
    ஆமொரு புண்ணிய பதியடைந்தார் 51

அங்கோர் பார்ப்பனப் பெண்-துட்ட
    ஆபாச தேவதைபால் பிடிப்புண்டு
அங்குமிங்கு மோடித் திரிவாள்-பலரை
    ஆலிங்கனஞ் செய்யவரு மதட்டிவரும் 52

சேலையை யவிழ்த் தெறிவாள்-திட்டித்
    திரிந்திடு மோடிவரு மடிக்கவரும்
காலை மாலை தெரியாது-பெற்றோர்
    கண்டுமன நொந்து மொற்றி நாதனைவேண்ட 53

ஈசன் சொற் படியே-பட்டினத்
    தெம்மடிகள் சமாதியில் நிட்டை புரிந்த
பாசத்தை விட்டறுத் தோன்-பார்வை
    பட்டவுடன் துட்டரெலாம் பறந்தோட 54

பார்ப்பனப்பெண் ணவளும்-தக்ஷணமே
    பரிசுத்த மாகிதானும் நிட்டை கூடி
பார்ப்பவ ரதிசயிப்ப.எட்டாம்
    பகற்றினம் பரனடி சேரலுற்றாள். 55

சென்னைநகர் மயிலையொடு-தில்லைச்
    சிதம்பரங் கழுபலை சீர்காழி
மன்னு மயில் பூசைசெய்யும்-மகிமை
    மாயூர மாதியதாந் தலங்கள் கண்டு 56

காரையுறு மஸ்தானுஞ்-சாயபைக்
    கண்டுநீ நானது யிதுவென்னும்
பேரையுமே சுட்டறுத்தால்-எங்கும்
    பிறங்கிய பொருளா யிருக்குமென்று 57

சொல்லிநாகை மேலக்கோட்டை-நிபந்த
    தொன்மையொரு சாவடியிற் றங்குநாளில்
நல்லதோ ரன்பனும்-தின்பண்டம்
    நல்கிவர அவன்மகன் ஒருபகலில் 58

பலகாரங் கொண்டு வரவே-வழியில்
பாம்பொன்று தீண்டிடச் சிறுவனுமே
அலறியே விழுந்தானும் சுவாமிகளை
அண்டியறிந் துடனே நகுலாவோர் 59

பாம்பின்வாய்ப் பையன் பட்டான்-நீ போய்ப்
பாரெனவே கீரியுமொன் றங்கோடிப்
பாம்பைத் துண்டித்தகாப-தகப்பன
பையனை யெடுத்து வந்தா சாமியைத் தொழ 60

கையாற் றொட்டாரசப்-குழந்தை
கண்திறந் தெழுந்தடி பணிந்ததுவரம்
பைவாய் விடம் போகக-பலவரம்
பத்தர் தினம் வந்தடி பரவலுற்றார் 61

ஆரூர் வன்மீகபுரம்-சோமநாதன்
அமருங் கோவிலிலு மருகுள்ள
நீரூறு மாற்றங்கரை-தோப்புகளில்
நிஷ்டை புரிந்திருப்பார் சிலகாலம் 62

உபசாந்த நிலையிற்குப்-பசித்தால்
உச்சிஷ்ட முட்கொள்ளுந் வீதிதோறும்
நியமின்றி வாழுநாளில்-சித்தர்
நெறியுறுஞ் சோமநாத முதலியை நாள் 63

குன்மநோய் வருத்திடவே-நடராஜன்
கோவிலடைந் தபமென் றலறியிட
சின்மயனுந் தில்லையப்பன்-சின்னிணிடை
திருவாரூர் தக்ஷிண மூர்த்தியைத் தொழு 64

தக்ஷணம் நோய் நீங்குமென்ன-கோவிலமர்
தக்ஷிணாமூர்த்திக் கபிஷேகம் பூசை
பக்ஷமுடனாராதனை-செய்ய
பசுபதி நடராஜன் சொற்பனத்தில் 65

வந்திந்த மூர்த்திபல்ல-அவதூதாய்
வதிவான் வீதிதோறு குதமங் குதிபோய்
சிந்தியென்ன முதலியார் நம -அப்படியே
தெருவினிற் குக்கலுடனெச்சில் பொறுக்கு 66

யுண்டிருந்த ஞானவையைத் தொழ-அவரும்
உன்னை நடராஜனிங்கு வந்துமென்னைக்
கண்டுதொழச் சொன்னானே-என்று
கையமுதையீந்தாரவன் வாயில்விடவும் 67

தொல்லை நோயற்றிடவே-முதலியார்
துன்பம் விட்டுத் தூயனைச் சுகமடைந்து
நல்லை நல்லை யிதுவென்றே-அதிசயித்து
நாடெங்குஞ்சொல்லலுற்றா ரதுமுதலே 68

தக்ஷணாமூர்த்தியென்ற-நாமம்
சகலருஞ் சொல்லலுற்றா ரின்னுங்கேளும்
பக்ஷமாய் சுவாமி யவ்வூர்-எங்கும்
பலவாமிடங்களில் வதியவோர் நாள் 69

ஆரூர்வாழ் தாசில்தார்-மெத்தையில்
அய்பனும்பதிதங்கத் தாசில்மனை பி
யாரோவொரு பித்துகொண்டோன்-பாயுற்றான்
அதைவந்து பாருமென்ன தாசில்தாரும் 70

சேவகனுங் கேசவனைக்-கூவி
சித்தனை யடிக்கச்சொல்லக் கேசவன் மாட்டேன்
பாவமிக நேருமென்று-சேவக
பணிசெய்ய விரும்பாமல் வேலையைவிட்டு 71

சாமிபணி செய்து வந்தான்-அப்போ
தாசில்தார் பிரம்பெடுத்து முதுகடிக்க
சாமியுந் துடைக்குமெனறார்-உடனே
தந்தபடி சாபமேறி தாசிலதாரும் 72

வேலைபோய் பெண்டிழந்து,பிணியுற்றார்
மேண்டந்தசெதி சொல்லேன் கேளுமம்மா
காலையோர்நா ளாற்றினருசே-மத்தடி
கண்திறந்துபடுத்திருக்குங் காலமதிலே 73

ஒருமாசப் பிணிவந்து-நோடி
உற்றசேலைகட்டிமபோது தனக்கெரிய
பெரிதா மிச்சிலந்தி-தந்தோ
பெரியநோய் தருமென் றிச்சுகொட்ட 74

தனத்தோடு பால்சுருங்க-வீட்டார்
சாமிபதம் வந்துதொழ ஜீவன்முத்தர்
தனத்தொடு பால்பெருகும்-என்றபடி
தனத்தினிற் பால்சுரந்து சேயருந்த 75

சாற்றரிய மகிழ்வடைந்தார்-சிக்கல்
தலத்துறு பழனியப்ப செட்டியென்பார்
மாற்றரிய துறவு கொண்டு-சுவாமிபால்
வந்தனு பூதியுற்றுந் திகம்பரானார் 76

மடப்புரச் சிவபத்தர்-பலரும்
வரிவைத்து நிதிசேர்த்துச் செட்டியாரை
படங்கட்ட விடங்கேட்டார்-சாமியை
வணங்கவு மவரோ ரிடங்குறிக்க 77

அங்கொரு பொன்காண-செட்டியார்
அவ்விடமே தக்கதெனக் கண்டுகொண்டு
திங்கள் நாளோரை முதலாய்-தெளிவாய்த்
தெரிந்தந்த நல்லவேளைய ஸ்திவாரந் 78

தொட்டார் திருவாரூர்-வதியுந்
தொண்டர்பாவா முதலியார் கனவான்கள்
இட்டமுடன் றந்துதவும்-பலவாம்
இருநிதி செங்கல் கருங்கற்கள் கொண்டு 79

மூலமர்த்த மண்டபமகா-மண்டபம்
முன்பின் மண்டபங்கள் கோபுரத்துடன்
சாலவுயர் தெப்பக்குளமும்-படித்துறை
சமைத்தா ரதன்பின் சரபோஜி 80

ராஜன்றரு காசிநகரப்-பாணலிங்கம்
ரமண்யமாய்த் தாபித்தார் பிரசாத
பூசைக் கைப்பத்காணி-நிலத்தைப்
பூமானும் வடபாதி மங்கலம் வாழும் 81

முதலியார் தானந்தர-சிவ
முத்தரனை வாழ்த்தியுடன் திருப்பிவிட்டார்
மதிலுறு தஞ்சைநகர-சரபோஜி
மகாராஜன் மடத்துக்கென் றேருநரில் 82

நிலந்தர ஆசைகொண்டு-விடைகோர
நிர்மலனும் கானல்நீர் போனிலமும்
நிலையல்லவென்று சொல்லி-நீறுதர
நிருபனும், பெற்று மவரடி வணங்கி 83

பூசைக்கென்றொருநகரா-தன்னை
பூசித்துச் சென்றாம் ராஜனிப்பால்
ஓசையுறும நாகைவாழும்-சுப்பா பிள்ளை
ஒண்டொடியாளுடன வந்து சித்தர் சுவாமி 84

உண்டபரிக்சல முண்டார்-இப்படியே
ஓயாது குருவாரமூண்டு வரவும்
கண்டா ரொருபுதல்வன் செல்வமிக்கக்
கண்டவவன் வியாபாரஞ் செய்யமுத்துப் 85

பேட்டைக்கிச் செல்லும்வழியில்-திருடர்
பெரிதுந் துன்புறுத்தக் குருவே கள்ளர்
சேட்டைக்கி யாளானேன்-அபயமென
சித்தருக் கதுதெரிந் தடவீரா 86

சுப்பனிடஞ் சிக்கிரம்போ-என்றார்
சொன்னவுட னகன்த்மாத்தாய் சாணாப்போ
ஒப்பரிய பன்னிருவர்-ஓடிவந்து
ஒறுத்தார் திருடர்க ளோடலானார் 87

அன்பரை முத்துப்பேட்டை-சேர்த்தே
அன்னோர் மறைந்தன ரன்பனுமே
இன்பமுடன் றிருவாரூர்-வந்தே
இரக்ஷக ரடிவணங்கிப் போற்றி யெங்கும் 88

நடந்ததைத் தெரிவித்தார்-மேலும்
நாட்டினா ரொருபடம் வடக்காரூர்
வடந்திரு. வீதி சுவாமி. உருக்சண்டு
வந்தனைகள் செய்திருந்தா ரிதுநிற்க 89

பார்ப்பன யோகிகிருஷ்ணா-நந்தகிரி
பாபஹரப்சருடன் மற்றிருவர்
ஏர்ப்பன ராமானந்த-சாமி
யென்பவருஞ் சங்கர சரஸ்வதியும் 90

சித்தாற்புதஞான-அனுபூதி
தெரிந்தவர்த் தரிசிக்க நாள்காத்தே
உத்திரத்திருநாளோர்-நன்னாள்
உற்றபோது சித்தர்கமலாலயக்கீழ்க் 91

கரையில் வெய்பல்பட-படுக்கக்
கண்டார்கள் மூவருந் தரிசித்தே
தருநிழ லுற்றிருந்தால்-இவரும்
சாலவுமே சுகமுற் றிருப்பாரென 92

மூவரும் நினைத்தார்கள்-நினைத்ததை
மூர்த்திகரன் கண்டறிந்து சேதனமாகும்
மீவரு மான்மாவை-அசேதன
விருக்ஷமோ காக்குமென்று சொல்லி நகைத்தார் 93

யோகிய ரிதைக் கேட்டுக்-களிப்புற்று
ஓகோகோ நமக்கன்றோ யிந்தப்புத்தி
யோக ருரைத்ததென்ற-மனந்தெளிந்
துள்ளத்தில் வந்தனங்கள் செய்துபோனார் 94

சாமி சொன்ன வாக்கியத்தை-கிருஷ்ணாநந்த
சாமிதக்ஷணாமூர்த்திவாக்ய சிந்தனம்
ஆமென்ன வடமொழியில்-பெரிய
அரியவோர் நூலியற்றி யுலகுக் கிந்தார் 95

பெரியவோ றதிசயம் நான்-சொல்லுவேன்
பெற்றியுடன் கேட்டருளும் பெற்றதாயே
திருவாரூர் கொத்தத் தெருவில்-வேளாள
சிறந்த குலத்துதித்துப் பத்தி நெறியில் 96

விழையும் அருணாசலம்-என்பார்
விதம் விதம பந்த லலங்காரஞ் செய்யும்
அழகாந் தொழிலுடையார்-சிலநாள்
அரங்கமா நகரினிற் பந்தல் வேலை 97

செய்யவு மங்கு சென்றே-யோர்நாள்
சித்திரயா யெட்டுவேலை செய்யும்போது
ஐயகோ சாரம் நழுவி-மேலிருந்தே
அருணாசலமுங் கீழ் விழுந்தார் 98

விழும்போ தபயங்குரு-என்றே
விருப்புடன் தக்ஷிணாமூர்த்தியை நெஞ்சில்
தழும்புறப் பதிய வைத்தார்-அப்போ
தடக்கரை வீற்றிருந்த சாமி யறிந்து 99

வலக்கரம் மேற்றூக்கி-மெதுவாய்
வைத்தார் தரைமீது பக்கமிருந்தார்
கலக்கமுற் றொன்று மறியார்-நாலாளுள்
கண்டனர் சித்தரடி யருணாசலம் 100

தனக்குற்ற ஆபத்தும்-அதுவுந்
தானாக நீங்கியதுஞ் சொல்லலுற்றார்
நினைத்தா ருகிருந்தார்-ஓகோகோ
வென்னலுக்கு முந்துநாள் சாமிசெய்த 101

செயலன்றோ காத்ததுகாண்-என்றே
தெளிந்தார் பணிந்தார் பயமடைந்தார்
மயல்விட் டருணாசலம்-துறவோர்
வாழ்கின்ற வாழ்விலுற்றுத் திகம்பரானார் 102

இன்னுமொரு சேதி கேளீர்-புத்தகரம்
என்னுமொரு சிற்றூரில் வெள்ளாஞ் செட்டி
துன்னுமொரு மரபுதித்தே-சாமிநாதன்
சுத்தனொரு சுற்றறிந்த வேதாந்தியாம் 103

தன்னொரு பெண்மணியை-மேகநோய்
சார்ந்தது தடித்துப் புண்ணீர் சொரிய
உன்னிய சாந்தியெலாஞ்-செய்தும்
உபயோக, மின்றியே உடல் வருந்த 104

பெரியவ ரொருவர்க்கண்டு-சுவாமி
பேதை யிவள் நோய் நீங்கும் வகையொன்று
ஊரைதரல் வேண்டு மென்ன-அன்னார்
ஓருஞ் சுத்தஞானிக் குணவளித்தால் 105

கொடுநோய் நீங்குமென-அத்தகைய
குற்றமற்ற ஞானியாவ ரெங்கேயுள்ளார்
அடியேற் குரைக்கவென-பெரியார்
அவதூதர் மடப்புர மடத்திருப்பார் 106

அவருக்குப் பிக்ஷைசெய்த-சேஷ
அன்னத்தைப் புசித்திடில் நோய் பறக்கும்
எவருக்கு மெளியரவர்-அங்கே
ஏகுமென்ன செட்டி மகள் மனைவியுடன் 107

மடத்திற் குருவைக்கண்டு-பலவாம்
வந்தனைகள் வழிபாடு செய்து பதிகந்
திடமா யோதினராய்-ஞானிகண்கள்
திறந் தந்த செட்டியாரை வீக்ஷணிக்க 108

சித்த சுத்தி யடைந்தாரே-செட்டியார்
தேறுமனதாகி சுவாமி முன்னர்வந்து
வைத்தார் தன் பெண்ணை-குருநாதன்
வந்து நின்ற பெண்ணை நோக்கி "என்னடி வேண்டும்" 109

என்றிருமுறை கேட்டார்-பெண்ணும்
"எனக்குன் னடிவேண்டு முன்னடி வேண்டும்"
என்றிருமுறை செப்ப-எம்பெருமான்
ஏந்திழையின் முகத்தினிற் காரி யுமிழ்ந்தார் 110

வாயூறல் மேற்படவும்-அதைப்பெண்
மகிழ்வெய்தி வாசமுறு சந்தனம்போல
நோயூறுந் தேகமெல்லாம்-பூசவுடன்
நோய் நீங்கிக் காந்தியுடல் பெற்றுவாழ்ந்தாள் 111

இந்தவகைப் பிணியகற்றல்-பிள்ளையிலா
ஏந்திழைகள் மகப்பெற அருளளித்தல்
சிந்தையுறு வரங்கொடுத்தல்-மேலாரும்
செல்வநல்கல் ஞானமோதல் திரிகால 112

நினைவுறலாதியதாம்-அற்புதம்
நேர்ந்திடவும் பல்லாயிரம் பக்தர் கூட்டம்
தினமவர் பதந் தொழுதே-மனமுந்
தேறினரேறினர் களிக்கடலில் 113

இவ்வண்ணம் விளையாடல்-பற்பல
வியற்றிடு மோர்நாள் வடமுகமாய்
செவ்விய பீடமமர்ந்து-சுற்றிலுஞ்
சீடர்பலர் நின்றிடவு, மவர் நோக்கி 114

"முடிந்தது" "முடிந்ததுவே" முற்றும்
"முடிந்த" தெனச்சொல்லி நிட்டையமர்ந்தார்
நடந்ததைக் கண்ணுற்ற-சீடர்
நாடெங்கு மறிவிக்கப் பலரும் வந்தே 115

சாமியைத் தொழுகிருந்தார்-அவரும்
சாதனையிலுற்றபடி யெட்டு நாள்கள்
ஓவிய மௌனவிருந்து-சுபியாண்
டுற்றநான் கொன்பது முப்பதயேழாம் 116

மன்மத மகிமைப்-உத்திர
மாமீனி லெங் குருவுஞ் சச்சிதானந்த
சின்மயமாம் ரூபமூர்த்தி-அடியார்
தேகமன மசைவற்று சிந்தைமயங்கி 117

அபிஷேக ஆராதனை-சீரா
யற்புதமா யலங்காரஞ் செய்துவைத்தார்
புஷ்பமிற் சந்தனமா-மழையும
பொழிந்தது பரிமள காற்றடித்த 118

ஞானியா ருடலமதை-சமாதி
ஞானமாங் கோவிலின்கண் வைத்தமைத்தே
மோனநிலை கண்டறிந்து-பக்தர்
மோக்ஷவீடு சேர்ந்து மனங் களிப்படைந்தார் 119

இதுவாமவர் சரிதை-இதையும்
எந்தவொரு நாவினாற் சொல்லவரிது
பொதுவா யோசிக்கின்-இதுவும்
பூலோகர் செய்த பெரும புண்ணியமென்றே 120

சொல்லுவே னுமம்மா-மேலே
சொன்னவொரு சமாதியைக் குருநாளில்
பல்லோர் தரிசித்து-யாரும்
பலன்பெற்று வாழுகின்றார் ரின்னுமம்மா 121

ஆச்சரியமிந்தச்சரிதை-யிதனை
அன்புடனே கேட்டவரும் படிப்போரும்
தேர்ச்சியுற சித்தந்தெளிந்து-மேலாஞ்
சிவபத முறவர மளியுமம்மா 122

என்று முனி வணங்கிடவும்-உமையாம்
ஈஸ்வரியுங் கணபதி கோவிந்தச் சரிதை
ஒன்றே படித்தாலும்-ஈசனடி
யொன்றுவது சத்தியமென் றுரைத்தாளே 123

ஆதலால்

எல்லோரும் பக்தி செய்வோம்-செய்தால்
ஏகாந்த சிவபத மெய்துவோமே
தனனா தன தனனா-நந்த
தனனா தன தன தன தனனா தனனா தன தனனா

முற்றிற்று.